உ

# "ஸ்ரீ தாபாஷ்ய ஸாரம்"

---



நடன குஞ்சிதபாத சபை

வெளியீடு-நெ. 7




எழுதியவர்,

சிதம்பரம், புராணரத்னம், உபந்யாஸசரபம்,
C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்
ப்ரஸிடெண்ட்,
நெ. 6, தெற்கு ஸந்நிதி, சிதம்பரம்.




பதிப்பகம்:
பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.
15—7—1949.



விலை] [அணா. 4.

# * கீதா பாஷ்ய ஸாரம். *

மாயா ரூபரும், வ்யக்தமில்லாதவரும், பரருமான நாராயணர், அண்டத்தினின்று அவ்யக்தமாக உண்டானார். அண்டத்தின் முடிவில் இந்த லோகங்கள், ஏழு த்வீபங்கள் உடைய பூமிகள் உண்டாயின. இவைகளை பகவான் ஸ்ருஷ்டித்து இந்த ஜகத்தின் ஸ்திதியை க்ரஹித்து முதலில் புல் பூண்டு முதலிய ப்ரஜாபதிகளை ஸ்ருஷ்டித்து ப்ரவ்ருத்தி லக்ஷண தர்மத்தை வேதோக்தமாக க்ருஹித்தார். பின்பு இதரர்களான ஸனக ஸனந்தனாதிகளை உண்டுபண்ணி நிவ்ருத்தி தர்மம் முதலிய தர்மம், ஜ்ஞானம், வைராக்யம் இந்த லக்ஷணங்களை க்ருஹித்தார். வேதோக்த தர்மம் இருவிதம். ப்ரவ்ருத்தி லக்ஷணம், நிவ்ருத்தி லக்ஷணம். எனவே; அதில் ஒன்று ஜகத்தின் ஸ்திதி காரணம். ப்ராணிகளுக்கு ஸாக்ஷாத்தாக உண்டான அதிகச்ரேயஸ்ஸிற்கு ஹேதுவான எந்த தர்மம் உண்டோ அந்த தர்மம் ப்ராம்ஹணாதி வர்ணங்களாலும்: ஆச்ரமங்களாலும், ச்ரேயஸ், பணம் என்ற இவ்வித ஆசை உள்ளவர்களால் அநுஷ்டிக்கப்படுகிறதாய் நீண்ட காலத்தால் அநுஷ்டித்த ஆசையால் உண்டானதும், உண்டு பண்ணப்பட்டதும், உள்ள விவேக விஜ்ஞானமும் ஹேது பூதமும், உள்ளது. அதர்மத்தினால் தர்மம் மறைந்து ஜகத்தில் அதர்மம் ஓங்கி ஜகத் ஸ்திதியை பரிபாலனம் செய்தற்காக அந்த ஆதி கர்த்தரான நாராயணர் என்ற விஷ்ணு பௌம ப்ரம்ஹத்தினுடைய வஸுதேவர் அம்சமாக க்ருஷ்ணனாக உண்டானார் அல்லவா? அப்பொழுது முதல் ப்ராம்ஹணத்வம் காப்பாற்றப்பட்டே அதன் அதீனமாய் வர்ணாச்ரம பேதங்களுக்கு வைதிக தர்மமும் உண்டாயிற்று. அந்த பகவானும் ஜ்ஞானம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம்,. தேஜஸ் இவைகளுடன் எப்பொழுதுமுள்ள ஸத்வ, ரஜஸ், தமோகுணாத்மக வைஷ்ணவ ஸம்பந்த தனது மாயையை மூல ப்ரக்ருதியுடன் சேர்த்து வசீகரணம் செய்து நித்யரும், நாசமற்றவரும் பூதங்களுக்குத் தலைவரும், நித்ய சுத்த முக்த ஸ்வரூபரும்,

உண்டான தனது மாயையால் தேஹத்துடனேயே உண்டான வர் போல் லோகாநுக்ரஹத்தை செய்கிறவராக காண்கிறார்.

தனது ப்ரயோஜனமின்றி பூதங்களை உயரத் தூக்க இச்சை உடைய வைதிக தர்மத்தை இரு விதமாக அது அடைந்தது, தவிரவும், சோகம், மோஹம், என்ற இரு ஸமுத்திரத்தில் மூழ்கிய அர்ஜுனனுக்கு உபதேசம் செய்தார். அதிக குணங்களுடன் க்ருஹித்த கர்மாவை அநுஷ்டிக்கச்செய்தார். அதிக குணங்களுடன் க்ருஹித்த அக் கர்மம் அநுஷ்டிக்கப்பட்டு வ்ருத்தி அடைந்தது. அந்த தர்மத்தை பகவானால் எவ்விதம் உபதேசிக்கப்பட்டதோ அதை ஸர்வ ஜ்ஞானரான வேதவ்யாஸர் அவ்விதம் பகவத்கிதையை 700 சுலோகங்களால் செய்து முடித்தார். இந்த கிதா சாஸ்த்ரத்தை ஸமஸ்த வேதார்த்த ஸார ஸங்க்ரஹ பூதமாக உள்ளதை அநேகர் துஷ்டமாய் அறிந்தும், அதன் அர்த்தத்தை அடைந்தும் அநேகர்களால் அநேக வித விவரணமாக பதார்த்தம், வாக்யார்த்தம், ந்யாயம் முதலிய அநேகம் மாறுபாடுகளை லௌகிகர்கள் அடைந்துள்ளார்கள் அதை நான் விவேகத்துடன் அர்த்த நிர்த்தாரணத்திற்காக சுருக்கமாக விவரணம் செய்கிறேன். கவனித்து அறியவேணும்.

இந்த கிதா சாஸ்த்ரத்திற்கு சுருக்கமான ப்ரயோஜனம் குறைவில்லாத பரமுள்ள ஹேதுவுடன் ஸம்ஸார விடுதலையே லக்ஷ்யம் என்பது முக்யத்வம். அதுவும் ஸர்வ கர்ம ஸந்யாஸ பூர்வக ஆத்ம ஜ்ஞான நிஷ்டை ரூப தர்மத்திற்கு ஸாதன ரூபம். அவ்விதமே இந்த கீதார்த்த தர்மத்தை உத்தேசித்து பகவானால் இவ்விதம் அதை யுத்த இடத்தில் சொல்லப்பட்டது.

அதர்மத்தை விட்டு தர்மத்தில் ப்ரவேசிப்பவனும் சுபாசுப கர்மாக்களை ஒருவன் விட்டு ஒரே ஆஸனத்தில் த்ருட சித்தனாகி பேசாமல் ஒடுங்கி வேறொன்றை நினையாது இருக்கிறானோ அதுதான் ஆத்ம ஜ்ஞானத்தைக் கொடுக்கும் ஸந்யாஸ லக்ஷணம். இதையும் பின்பு அர்ஜுனனுக்கு சொல்லப்படுகிறது.

தனது தர்மங்களை விட்டு எவன் என்னை ஒருவனையே சரணம் அடை என்பதை மேற்கொள்கிறானோ, அவன் உதய

19-3

மாகும் உண்மையை ப்ருவ்ருத்தி லக்ஷண தர்மமுள்ள வர்ணாச்ரமங்களை உத்தேசித்து விடுபட்டவனாகி அந்த தேவாதி ஸ்தான ப்ராப்தி ஹேது அடைந்து ஈஸ்வரார்ப்பண புத்தியால் அநுஷ்டித்து தத்வ சுத்திக்கே காரணனாகி பல ஸம்பத்துடன் விடுபட்டு விடுகிறான்.

ஸத்வ சுத்தியின் எந்த ஜ்ஞான நிஷ்டைக்கு யோக்ய அடைதல் மூலமோ அது ஜ்ஞான உத்பத்திக்கு ஹேது. அதிகச்ரேயஸ் ஹேது இவை அவனுக்கு உண்டாகிறது. அவ்விதமே இவ்வர்த்தத்தை அநுஸந்தானம் செய்து சொல்லுகிறார்.

ப்ரம்ஹத்தை அடைந்த கர்மாக்கள் யோகிகளது கர்மாக்கள் இஷ்டத்தை விட்டு ஆத்ம சுத்திக்கே செய்கின்றனர். இந்த இருவித அதிக ச்ரேயஸ் ப்ரயோஜன பரமார்த்த தத்துவம். பரமான வாஸுதேவர் என்ற பெயருடைய அப் ப்ரம்ஹம் நன்றாகத் தெரிகிறதாகிறது. ப்ரயோஜனமின்றி ஸம்பந்தங்களைத் தேடுதல் கீதா சாஸ்த்ர ப்ருவ்ருத்தி எக்காரணத்தாலும் அவ் வர்த்தத்தில் ஸமஸ்த புருஷார்த்த ஸித்தி என அறியவேணும். பின்பு அதன் விவரணத்தில் முயற்சி என்றால் செய்யப்படும் பாண்டவனைப் பார்த்துச் சொல்லியது முதல் க்ருஷ்ணன் பதிலுக்குச் சொல்லியதுவரை யுத்தம் செய்ய முடியாது என சொல்லிப் பேசாமல் இருந்தான் என்றதுவரை ப்ராணிகளது சோக மோஹாதி ஸம்ஸார பீஜ தோஷ காரண பூதத்தை எண்பிக்கிற அர்த்தத்துடன் க்ரந்தம் வ்யாக்யானம் செய்யப்படுகிறது.

அவ்விதமே அர்ஜுனனால் ராஜ்யம், குரு, புத்ரன், ஸ்நேஹிதன், ப்ந்துக்கள் இவர்களிடம் நான் காணும் நிமித்தமாக ஸ்நேஹம் அறுத்தல் நிமித்தமாக ஆத்மாவின் சோக மோஹங்களைக் காண்பிக்கிறதாய் எவ்விதம் பீஷ்மரையும் என் சுற்றத்தார்களையும் கொல்வேன் என்பதாலேயே சோக மோஹங்களிலிருந்து விவேக ஜ்ஞானத்தைத் தானாகவே க்ஷத்ரிய தர்ம யுத்தத்தில் ப்ரவ்ருத்தித்து அதினின்று யுத்தம் வேண்டாம். பரமார்த்தமான பிக்ஷை முதலானதைச் செய்தற்கு ஆரம்பிக்கிறேன் என்றான் என்பதும.

அவ்விதமே ஸர்வ ப்ராணிகளது சோக மோஹாதி தோஷார்ப்பண சித்த விகாரங்களுக்கு ஸ்வபாவமாகவே தனது தர்ம பரித்யாகம். நடுத்த ஸேவை, இவை உண்டாவது ஸஹஜம். தனது தர்மத்தில் ப்ரவ்ருத்தித்து அந்த வாக், மனஸ், சரீரம் இவைகளை உடைய சேர்க்கை பல ஸம்பந்தமாய் முதலிலேயே அஹங்காரத்துடன் உண்டாகிறது. அவ்விடத்தில் இவ்வித மிருக்கையில் தர்மம், அதர்மம் இவைகளுக்கு ஆறுதலடைதல், ஆஜ்ஞை, ஜன்மத்தில் உள்ள துரதிர்ஷ்டம், ஸுக, துக்கங்கள் இவை அடைதல் மூலம் உள்ள ஸம்ஸாரம் முடிவடையாது. இதிலிருந்து ஸம்ஸார பீஜமுள்ள சோக மோஹங்கள் இரண்டும் ஸர்வ கர்ம ஸன்யாஸ பூர்வக ஆத்ம ஜ்ஞானத்தினால் வேருக்கி தள்ளுதலை ஏற்படுத்துகிறது என உபதேசிப்பது ஸர்வலோக அநுக்ரஹ நிமித்தம் அர்ஜுனனைக் காரணமாக வைத்து க்ருஷ்ணனால் உபதேசித்தது.

அவ்விடத்தில் தர்மத்துடன் சேர்ந்த மனதின் பெரிய துக்க ஸமுத்ரத்தில் மூழ்கிய அர்ஜுனனுக்கு வேறு இடம் ஆத்ம ஜ்ஞான தாண்டுதலைப் பாராமல் அவனை மேலே தூக்க இச்சையுடைய பகவான் ஆத்ம ஜ்ஞான அவதாரமாக செய்தவராய் சொன்னார்.

ஆகவே கீதா சாஸ்த்ரத்தில் ஆத்ம ஜ்ஞானமுள்ளவனுக்கு ஸந்யாஸம்தான் முக்ய அதிகாரம். கர்மாவில் அதிகாரமில்லை என அந்தந்த இடத்தில் மேலே ஆத்ம ஜ்ஞான ப்ரகரணத்தில் சொல்லப்போகிறோம் என்பதையும் காண்பித்துள்ளார்.

சோகம், மோஹம், இவை போகுதற்கு லௌகிக ந்யாயமாக தனது தர்மத்தைப் பார்த்து முதலில் ச்லோகங்களால் சொல்லப்பட்டது. தாத்பர்யத்தால் இல்லை.

உண்மை என்னவெனில்; இங்கே முக்யம். அதுவும். சொல்லப்பட்டு முடிவு செய்யப்படுகிறது. எது உனக்கு இஷ்டமோ அதே சாஸ்த்ர விஷய பிரித்தல். மறுபடியும் காண்பிக்கப்பட்டபொழுது மேலே ஸாங்க்யர்களுக்கு ஜ்ஞான யோகம், யோகிகளுக்குக் கர்மயோகம், என நிஷ்டை இரண்டு

விஷயமும் உள்ளதை சாஸ்த்ரம் ஸுகமாக ப்ரவேசிக்கச் செய்கிறது.

கேட்பவனும் விஷய மாறுபாடு ஸுகத்தை எப்படிக் கொள்ளமுடியும். எவன் முதலிலே ஸந்யாஸம் செய்து ஜ்ஞான யோக நிஷ்ட கார்யங்களில் ப்ருவ்ருத்தித்து கர்மயோகத்தி னின்று நிச்சயமாய் விடுகிறேன் என நினைக்கிறானே? அவனுக்குத்தான் இந்த அத்யாத்ம சாஸ்த்ரத்தில் ஸாதனங் களை முழுமையும் உபதேசித்தது.

எந்த யத்ன ஸாத்யமுள்ள விஷய லக்ஷணங்களோ அவைகள், புத்ரன், பணம், லோகம், ஆசை இவைகளை விட்ட வனுக்கே ஸந்யாஸ ரூப ஆத்மக்ரிடை. அது நிச்சயம் உள்ள லக்ஷணம். ஆத்மாவிற்கு கர்மாக்களில் அதிகாரமில்லை என் பதை இச் ச்ருதி ப்ரமாணமும் ஸமஸ்த உபநிஷத்துக்கள், இதிஹாஸம். புராணம், யோக சாஸ்த்ரம், இவை ஜ்ஞான முக்ய பூதம். மோஹமடைய இச்சை உள்ளவனுக்கு ஸர்வ கர்ம ஸந்யாஸ விதி. ச்ருதி ஸ்ம்ருதிகளுக்கு விஷயம் காணப் படுகிறது.

பாப கர்மா துலைவதால் மநுஷ்யனுக்கு ஜ்ஞானமுண் டாகிறது எவ்விதமெனில்; கண்ணில் ப்ரஸித்தி உள்ள ஆத்மாவை ஆத்மாவிடம் எவ்விதம் பார்க்கிறானோ? அது போல் ஜகத் ப்ருவ்ருத்தி ஹேது கர்மாவே. அக்னியில் கொடுத்த ஆஹுதி ஆதித்யனையே அடைவிக்கிறது. ஸூர்ய னிடமிருந்து மழை, மழையினால் அன்னம், அதினின்று ப்ரஜைகள் என்பது.

இதினின்று பகவான் ஆறு குணங்களுடன் சேர்ந்து ஐச்வர்யம், தர்மம், யசஸ், லக்ஷ்மி, வைராக்யம், மோக்ஷம், உற்பத்தி, ப்ரளயம், பூதங்களுக்குக் கதி, ஆகதி, வித்யை, அவித்யை என்ற இவைகளை பகவான் சொல்லுகிறவர் என அறியப்படுகிறது.

நான்கு வர்ணத்தாரது கர்மாக்களை சொல்லும்பொழுது ஸாத்விகம், பெருமை, தமஸ், தபஸ் முதலிய கர்மாக்கள் ப்ராம்ஹணனுக்கு உள்ளது. ஸத்வம் விட்டு ரஜோ குணம்

க்ஷத்ரியனுக்கு உள்ளது. அதனின்று அவனுக்கு சௌர்யம், தேஜஸ் முதலிய கர்மாக்களும் அமையும். தமஸ் விட்ட ரஜஸ் ப்ரதானம், வைச்யனுக்கு உழுதல் முதலிய கர்மாக்கள். ரஜஸ் விட்ட தமஸ் ப்ரதானம் சூத்ரனுக்கு சுச்ரூஷை முதலிய கர்மாக்கள். இவ்விதம் நான்கு வர்ணத்தார்களது கர்மாக்கள் விபாகம் செய்து என்னுல் நான்கு வர்ணம் ஸ்ருஷ்டிக்கப் பட்டது.

நன்ருகக் கவனித்தால் நிஷ்டையுடைய ஸந்யாஸி களுக்கு உடனே முக்தி சொல்லப்பட்டது விளங்கும். கர்ம யோகமும், ஈச்வரார்ப்பண புத்தியில் ஸர்வ பாவத்துட்ள் ஈச்வரனிடம் கொடுத்துச் செய்கிற ஸத்வ சுத்தி ஜ்ஞான ப்ராப்தி. அதுவே ஸர்வ கர்ம ஸந்யாஸம் கர்மாவினுல் மோக்ஷம் என்பதை இவ்விதம் பகவான் ஒவ்வொரு தடவை யும் சொல்லுகிருர், சொன்னுர். உலகத்தில் ஆத்மா ப்ரிய முடையது, அதினுல் ஜ்ஞானிகளுக்கு ஆத்மாதான் ப்ரியம். அதினின்று வாஸுதேவர் பரியமுடையவராகிருர்.

அரசமரம் ஒரு உதாஹரணம் ஸம்ஸார பந்தம் அறுக் கிறது என்பதை எண்பிக்கிருர். வ்யக்தமில்லாதது மூலம். மூலத்திலிருந்து கிளைகள் அநுக்ரஹ ரூபம். அடிமரம் புத்தி. பெரிய கிளையாகிய இந்திரியங்கள் பஞ்ச பூதம். இலைகள் விஷயங்கள். தர்மாதர்மம் புஷ்பம். ஸுக துக்கம் பழம். ஆதி முதல் ஸர்வ பூதங்களுக்கும் ஜீவபூதமாய் உள்ளது, வெகு நாளான ப்ரம்ஹ வ்ருக்ஷம், ப்ரம்ஹ வனம். என இதற்குப் பெயர். இதில் எப்பொழுதும் ப்ரம்ஹா ஸஞ்சரிக்கிருர். அதை அறுத்து ஜ்ஞான மயமாகிற பெரியவாளால் வெட்டி பின்பு ஆத்ம ஸுகமடைவானுகில் அவன் அதினின்று ஒரு பொழு தும் திரும்புவதில்லை, மோக்ஷமடைகிருன். ஆகையால் (ஸம்ஸார பந்த மூலமுள்ள கர்மாக்களை விட்டு ஜ்ஞான ஸாதன மோக்ஷமடையவேணுமென்பது பொருள்.)

இவ்விதம் பகவானது ஸத்ய ப்ரதிக்ஞை உள்ளதை அறிந்து பக்தி அவச்யம் செய்து; வரப்போகிற மோக்ஷ பலத்தை நினைத்து; பகவானது சரணத்தில் முக்ய த்யான மாக ஆகவேணுமென்பது க்ருஷ்ணன் உபதேசம் அர்ஜுன னுக்கு சொல்லப்பட்டது.

பகவத் கிதையில் அர்ஜுனனுக்கு க்ருஷ்ணன் கார்யத்தை உத்தேசித்தே யுத்தம் செய்யவேணுமென சொல்லுகையில்; இந்த காணப்படுகிற தனது பந்துக்களைக் கொன்று ராஜ்யமடைய இஷ்டமில்லை என துக்கத்துடன் சொல்லுகையில்; அவனைத் தேர்தல் செய்தற்காகவே அநேக அரும் பெரும் விஷயங்களை உபதேசமாக செய்தார். பின்பு தனது கர்மாவைச் செய்தால்தான் கௌரவம் உண்டாகும் என வற்புறுத்தும் விஷயமும் சொல்லியது. அதை அறிந்த அர்ஜுனன் இணங்காமல் பின்பு உபதேசங்களைக் கேட்டும் விச்வ ரூபத்தைக் கண்டும் தேர்ச்சி அடைகிறான் என்பதை 18-அத்தியாயங்களிலும் அநுக்ரஹ மூலமாக உபதேசித்தார்.

அதன் விரிவுள்ள விஷயங்களை சுருக்கமான விஷயத்தில் கிழே 18-அத்தியாயங்களை எழுதுகிறேன்.

அத்தியாய ஆரம்பத்தில்; ஸஞ்சயரைப் பார்த்து த்ருதராஷ்ட்ரர் கேட்கையில்; நமது துர்யோதனாதிகளுடைய ஸைன்யங்களிடம் யுத்தம் செய்ய ஆரம்பித்த பாண்டவர்கள் என்ன செய்தார்கள்என்பதை முக்யமாக வைத்துச் சொல்லும் விஷயம் பகவத் கீதையில்; ஆரம்பமாகிறது.

பின்பு ஸஞ்சயர் த்ருதராஷ்ட்ரரிடம் நமது ஸைன்யங்கள், மற்றவர்கள் எல்லோரும் சேர்ந்து கூட்டமாய் சங்கநாதத்துடன் இருந்தனர். அது ஸமயம் யுத்தம் ஆரம்பிக்கும் ஸமயத்தில் அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பார்த்துச் சொல்லுகிறான். இவர்களை ஏன் கொல்லவேண்டும், காரணம் தெரியவில்லைஎன்றதும்; க்ருஷ்ணன் அர்ஜுனன் வீற்றிருந்த ரதத்தைச் சேனையின் நடுவில் நிறுத்திச் சொன்னார். எல்லா அரசர்களையும கொன்று ஜயமடையத்தான் வேணும்; என்றதும் இவர்களைக் கொன்று எனக்குப் பிறகு ஸுகம் வேண்டாம் என அர்ஜுனன் கூறி; வில், பாணம், எல்லாவற்றையும் கிழே வைத்து உட்கார்ந்துவிட்டான் என்ற விஷயம் சொல்லியதை முதல் அத்தியாயத்தில் காணும் விஷயம்.

இரண்டாம் அத்தியாயத்தில்; க்ருஷ்ணன் சொல்லுகையில், இவர்களைக் கொல்லாவிடில் மிகவும் உனக்கு

அபவாதம் உண்டாகும் என க்ருஷ்ணன் அர்ஜுனனைப் பார்த்து ஸேனு மத்தியில்; செய்யமாட்டேன் என்றதற்குப் பதில் கூறினர். ஜனகர் முதலான தத்துவ வித்துக்கள் ஈச்வரார்ப்பண புத்தியில் செய்கிற கர்மாக்கள் ஸித்தி அடைகின்றன எனக் கருதிச் செய்தனர். அதினுல் அவர்கள் மோக்ஷமடைந்தனர் என்பது ப்ரஸித்த விஷயம். அம்மாதிரியே கீதையில்; கேவல தத்வஜ்ஞானத்திலேயே மோக்ஷ ப்ராப்தியே தவிர கர்மாவைச் செய்வதால் கிடைக்காது என்பது நிச்சய அர்த்தம். அதை அடிக்கடி ஒவ்வோர் இடத்திலும் விரிவாகச் சொல்லுவோம். பெரிய சோகக் கடலில் மூழ்கிய அர்ஜுனனுக்கு வேறிடத்தில் ஆத்ம ஜ்ஞானத் தேறுதல் செய்வதைக் காணுமல் பகவான் வாஸுதேவர் பின்பு அர்ஜுனனைப் பார்த்து ஆத்ம ஜ்ஞானத்திற்காகவே நான் அவதாரம் செய்தவன் எனவும் சொன்னர்.

மேலும்; ஸத் வ்யாபார உருவமுள்ள பரமார்த்த உருவத்துடன் நித்யர்கள் மரணமடைகின்றனர். இதைக் கேட்டு அர்ஜுனன் இதனுல் என் நிமித்தம் அவர்களின்றி ராஜ்ய ஸுகம் அடையமாட்டேன் என்றதும், க்ருஷ்ணன் பதில் சொல்லுகையில், ஸத் ஒன்றுதான் எல்லாவற்றிலும் இருக்கிறது. துக்கமில்லாத் தன்மையை அதிகமாகக் கீதா சாஸ்த்ரம் ஆரம்பித்துச் சொல்லி உள்ளது. இதற்கு அநேக ரிக்குகளை ஸாக்ஷியாகச் சொல்லி கார்ய காரண கூட்டங்கள் ஆத்மாவிடம் பூதங்களை உத்தேசித்து துக்கப்பட ந்யாய மில்லை. யுத்தம் தனது தர்மம் என நினைத்து இவ்விதம் யுத்தம் செய்கிற உனக்கு இவ் வுபாயங்களுடைய் உபதேசத்தைக் கேள். ஈச்வர ஆராதன கர்மா ஸமத்வ புத்திக்கே உள்ளது. அதினின்று மற்றக் கார்யங்கள், ஸமத்வ புத்தியுடன் தனது தர்மத்தை அநுஷ்டிக்கிறதாக எந்த பலனுண்டோ அதைக்கேள். யோகாநுஷ்டானத்தால் அடைந்த ஸத்வ சுத்தி மூலம் புத்தி எப்பொழுதும் அடையப்படுகிறது.

மேலும் மோஹமின்றி நாசமற்று அதன் மூலம் ஆத்ம விவேக ப்ரஜ்ஞை அடைகிருன். எப்பொழுது கர்ம யோக ஸம்பந்த பலம் பரமார்த்த யோகமோ அப்பொழுது அதை அடைய வழி நான் சொல்லுகிறேன். இந்த்ரியம் ப்ரவ்ருத்திப் பதால்தான் தோஷமடைகிறது. ஆகவே இந்த்ரியங்களை

அடக்கவேணும் என யோக மார்க்க ஸ்தானங்களை இரண்டாம் அத்தியாயத்தில் மேற்கோளாக உபதேசித்தார்.

சுத்த ஜ்ஞானமே மோக்ஷம் தரும் என்பது நிச்சயார்த்தம் இதை உபநிஷத்துகளிலும், கீதையிலும் சொல்லப் பட்டது. எந்த ஆத்மா அறிந்தவனால் ஏவிய கர்மாவுடன் ஆரம்பிக்கப்படுகிறதில்லையோ அது அஸத்துதான். ஜகத் சக்ர ப்ரவ்ருத்தி; கர்மாவுக்கு முக்யம். மறுபடியும் நானே உன்னைக் க்ருதார்த்த புத்தியுடன் ஆத்ம வித்து. இதான் எனப் பெயரினால் அவனுக்கும் ஆத்மா அறியமுடியாது. இதரமாக அநுக்ரஹமே செய்யப்படவேண்டியது. முட்டாள் தான் கர்மாக்களில் ச்ரத்தை அடைகிறான். அவனுக்கு அது கிடைக்காது. முதலில் இந்த்ரியங்களை அடக்கிக் காமமாகிற சத்ருவை ஜ்ஞானி ஜெயிக்கிறான். பிறகு ஜ்ஞானியாகிவிடு கிறான் என கர்மாவை உயர்த்திச் சொல்லும் காரணங்களை விவரித்து அர்ஜுனனுக்கு க்ருஷ்ணனால் மூன்றும் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது.

எந்த யோகம் இவ் விரண்டு அத்தியாயங்களிலும் சொல்லப்பட்டதோ? அது ஜ்ஞான நிஷ்டை லக்ஷண ஸந்யாஸத்துடன் கர்ம யோக உபாயமாக எவ்விடத்தில் வேதார்த்தம் முடிவு அடையப்பட்டதோ? அது ப்ரவ்ருத்தி லக்ஷணம், நிவ்ருத்தி லக்ஷணம், என இரு விதமாகிறது.

கீதையிலும், மற்ற சாஸ்த்ரங்களிலும் இந்த யோகமே பகவானால் ப்ரியமாகச் சொல்லப்பட்டுள்ளது. பின்பு வேதார்த்தத்தை முடிவாக எண்ணி வம்ச ரூபமாக பகவான் சொல்லுகிறார். பலமில்லா இந்த்ரியம் ஜெயிக்காதவனையே அடைந்து இந்த யோகம் நஷ்டமடைந்தது. இவ்வுலகமடைந்து புருஷார்த்த ஸம்பந்தமில்லாமலேயே காண்கிறான். இப்பொழுது மோக்ஷ மார்க்கம் ஆரம்பிக்கப்படவில்லை. மனுஷ்ய உலகிலேதான் வர்ணாச்ரம தர்மங்கள் முதலிய கர்மாதி கார்யங்கள். மற்ற உலகங்களில் இது கிடையாது. மநுஷ்ய உலகிலேதான் வர்ணாச்ரமங்கள் பிரிவுடன் சேர்ந்து மார்க்கத்தைத் தேடுகின்றன.

மேலும் நன்றாய் அறிந்தவனுக்கு யஜ்ஞம் முதலானவை ஸம்பாதித்து ஸ்தோத்ரம் செய்தற்கு மற்றவர்களும் கூட்வே

செய்கிருர்கள். யோகிகள் அதைத் தள்ளிவிடுகிருர்கள். தைவத்தை அடையவேண்டியதற்காக நன்ருக அறிந்தவனுக்கு மற்றவை தேவையில்லை. அநேக யஜ்ஞங்கள் இதன் மூலம் உபதேசிக்கப்பட்டது. அதனுல் ஸித்தமுள்ள புருஷார்த்த ப்ரயோஜனம் ஜ்ஞானமே முக்யமாக ஸ்தோத்தரிக்கப்படுகிறது. எது தனிமையில் ஜ்ஞான ப்ராப்தியை உண்டாக்குகிறதோ அது உபதேசிக்கப்படுகிறது. இவ விஷயத்தில் ஸந்தேஹம் கிடையாது. பாபிகளுக்கோவெனில்; ஸந்தேஹம்தான் உண்டாகும் என இவ்விதம் ஜ்ஞான கர்ம ஸந்யாஸ யோகம் விவரமாக நான்காம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது.

பரப்ரம்ஹம் தோஷமற்ற உருவம். அதுதான் ஆத்மா. அதுதான் லயமடைய சக்தியைக் கொடுக்கிறது. அவ்விதமே ப்ரம்ஹத்திடம் ப்ரம்ஹ ப்ராப்தியை அடைகிருன். இவ்விதம் த்யான யோகத்தை நன்ருக அறிந்து அந்தரங்க முடையவனுகிருன். என்பது மனதை அடக்கி இருந்து அடையவேண்டிய விஷயம். இவ் விஷயம்தான் மிக்க முக்யம் என அர்ஜுனனுக்கு க்ருஷ்ணன் விரிவாக உபதேசித்த ஸந்யாஸ யோகம் என்பதை ஐந்தாம் அத்தியாயம் மூலம் வெளிப்படுத்தப்பட்டது.

த்யான யோகத்திற்கு அபேக்ஷியாத பலம் கர்மயோகம் வெளி ஸாதனம். அதை ஸந்யாஸத்தால் ஸ்தோத்ரம் செய்து இந்த கர்ம யோகம, த்யான யோகம் இவை காண்பித்துப் பின்போவெனில்;யோகம் ஒழுங்கான ஆஸனம்,ஆஹாரம்,விளையாட்டு இவைகள் யோக லக்ஷண தர்மம். என அதன் பலத்தை அர்ஜுனனுக்கு க்ருஷ்ணன் சொல்லுகையில்; ஆஸனத்தை முதலில் சொல்லி, சரீர தாரணம் பிறகு சொல்லப்படுகிறது. யோகிகளுக்கு ஆகார நியமம் யோகியாக்கும் தன்மை வணங்கிய சித்தம் இவை யோகாப்யாஸ பலத்துடன் ஒரே மனதாய் காற்றில்லாத வெளிச்சம்போலுள்ளது.யோகிகளுக்கு ஆத்மாவிடம் மனது செலுத்துவதற்கு ப்ரவ்ருத்தி உண்டாக்கும். யோகத்திற்குப பலம் ப்ரம்ஹ தர்சனமே ஸர்வ ஸம்ஸார அறுத்தல் காணும் என்பதைக் காண்பிக்கிறது. இவ்வாத்மாவைப் பார்த்தவன் பலம் அடைகிருன். இது யோகி

களுக்கு ச்ரேயஸ்ஸை அளிக்கிறது என ஆரும் அத்தியாயத்தில் த்யான யோக ஸம்பந்த விஷயங்கள் சொல்லப்பட்டது.

யோகிகள் இவ்விதம் தைவ ஸம்பந்த மூன்று குணங்களுடன் வைஷ்ணவ மாயை அடைந்து ப்ரம்ஹமாகின்றனர். என்னை அடைந்தவர்கள் இம் மாயையைத் தாண்டுகின்றனர். ஏன் எல்வோரும் என்னை அடைகின்றனரில்லை எனில்; அஸுர பாபங்களைச் செய்வதால் அடைய முடிகிறதில்லை. புண்ய கர்மாக்களுக்கு ஸமமாக உத்தமர்கள் அடைகிறார்கள். எல்லா ஆத்மாக்களும் வாஸுதேவ ரூபமே. யோக மாயை மூடின என்னை எவர்கள் அறியவில்லையோ; அவர்கள் எனது மாயா ஈச்வர ஜ்ஞானத்தை விட்டவர்களாகிறார்கள். என விஜ்ஞானம், ஜ்ஞானம் என்ற இரு விஷயத்தையும் அர்ஜுனனுக்கு ஏழாம் அத்தியாயத்தில் உபதேசம் செய்தார்.

எதினின்று அக்ஷர ரூப ப்ரம்ஹ உபாயம் அடைய வழி காண்பிக்கப்பட்டதோ? அது இப்பொழுது அக்ஷர ஸ்வரூபத்தைப் பார்ப்பதற்குச் சொல்லப்படுகிறது. இந்த யோக உபாயம் வழியாகவே அடையவேண்டியது. அதை அடைய அநேக வழிகள் சொல்லப்படுகிறது. யோக மாஹாத்மியம் விரிவாகச் சொல்லியதை எவன் அறிகிறானோ? அவன் அதைப் பெறுகிறான். என எட்டாம் அத்தியாயத்தில் தாரக ப்ரம்ஹ யோக விஷயத்தை விஸ்தாரமாக அர்ஜுனனுக்கு க்ருஷ்ணன் சொன்னார்.

நாடி மூலமாக நிச்சய ஜ்ஞான ஸாதனம் ஸகுணமாகச் சொல்லப்பட்டது. அதற்குப் பலம் அர்ச்சனம், ஆராதனம் இவை க்ரமமாகக் காலாந்தரங்களில் பரம்ஹ ப்ராப்தியையே உருவாக உருவமின்றிச் சொன்னார். அவ்விடம் அதைக் கொண்டே மோக்ஷ ப்ராப்தி பலம் அடையப்படுகிறது. மூர்த்த ரூப லிங்க உருவத்துடன் ஆகாசத்தில் சேர்ந்து நடுவில் நான் ப்ரகாசிக்கிறேன். ஆகையால் மூர்த்த ரூபம் சொல்லப்பட்டது. எவர்கள் மறுபடியும் ச்ரத்தை உடையவர்களாகிப் பகவானது பக்தி லக்ஷண மோக்ஷ மார்க்கத்தில் ஏவப்படுகிறார்களோ அவர்கள்தான் யோகிகள். எந்த ப்ரகாரம் உபாஸித்தல் என்பதும் சொல்லப்படுகிறது. என்னை அநேக விதமாக ஜனங்கள் உபாஸிக்கிறார்கள்.

என்னையே உபாஸிக்கவேணு மென்பதைச் சொல்லுகிறது. ஆசை அபேக்ஷிப்பவர்கள் மூடர்கள். நன்ருய் அறிந்தவர்கள் காமமின்றி அபேக்ஷிப்பவர்கள். என ராஜ வித்யா, ராஜ குஹ்யம் இவை விரிவாக ஒன்பதாவது அத்தியாயத்தில் யோக உபாஸனே சொல்லப்பட்டது.

முன் அத்தியாயங்களில் பகவானது தத்வத்தையும் விபூதியையும் ப்ரகாசமாகச் சொல்லப்பட்டது. இப்பொழுது எந்தெந்த பாவங்களில் பகவானே நினைக்கவேணுமோ? அந்தந்த பாவங்கள் சொல்லவேணும். பகவானது தத்வம் சொல்லப்பட்டிருப்பினும் அடைய முடியாத விஷயம். இதி னின்று லோகங்களுக்கு நான் மஹேசச்வரனுயுள்ளவன், உண்மையாக என்னைப் பக்தர்கள் பஜனே செய்கிருர்கள் என்றதும் அர்ஜுனன் யதோக்தமாகப் பகவானது விபூதியையும். யோகத்தையும் கேட்டு ஆனந்தமடைகிருன். தேவர்களுக்குத் தான் நீர் தலைவர் என்கிருர்கள்; அதைச் சொல்லவேணும் என அர்ஜுனன் கேட்க, க்ருஷ்ணன் பதில் கூறுகையில்; உலகிலுள்ள அண்ட பிண்ட சராசரங்களுக்கு எல்லாம் நானே தலைவனுகவே இருக்கிறேன் என்றும் உரைத்தார். இதை விரிவாகப் பத்தாம் அத்தியாயத்தில் விபூதி யோக மஹிமை எனச் சொல்லப்பட்டது.

இப்பொழுது உனக்கு விச்வரூபதரிசனம் பார்க்கவேண்டியது என அவச்யமாக உனக்கு இதோ காண்பிக்கிறேன். இது ஸ்வாநுபவமாக உள்ளது. யோக சக்தி தர்சனத்தால் அநுமானம் செய்யும்படிச் சொல்லுகிறேன் என்று விச்வரூப தர்சனம் காண்பித்ததை அர்ஜுனன் கண்டு பயமடைந்தவனுய் அர்ஜுனனை க்ருஷ்ணன் தேர்தல் செய்து ப்ரியமுள்ள வார்த்தையால் சாந்தப்படுத்திச் சொல்லுகிருர். ஆத்மாவின் ஸ்வய உருவ தரிசனத்தால் எனக்கு ஸந்தோஷமே என அர்ஜுனன் கூற க்ருஷ்ணன் வேறு விதமாக மறுபடியும் சொல்லுகிறேன் என பதினேராவது அத்தியாயத்தில் விச்வரூப தர்சன விஷயத்தை விவரமாகச் சொன்னுர்.

விபூதி ஸம்பந்தம், பரமாத்ம ப்ரம்ஹ அக்ஷரம், ஸர்வ விசேஷண ஸம்பந்த உபாயம் இவ் விஷயங்கள் என சொல்லப்பட்டது. ஐச்வர்யம், யோகம் இவை ஸர்வ ஜ்ஞான சக்தி

ஸத்வ உருவமுடைய ஈச்வரனது அம்சம் உனக்கு உபாஸனை யாக அங்கங்கே விரிவாகச் சொல்லப்பட்டது. விச்வரூப அத்தியாயத்தில் முதன்மையான ஈச்வரனே ஸமஸ்த ஜகத் துக்கும் ஆத்ம ஸ்வரூபன் எனச் சொல்லப்பட்டது. விச்வ ரூபமோ உன் ஸம்பந்த உபாஸனு ஸம்பந்தம் உன்னாலேயே கேட்கப்பட்டது. அதுவும் காண்பித்துச் சொல்லிவிட்டேன். என் கர்மாக்களைச் செய்பவன் இது முதலான இரண்டு பக்ஷங்களுக்கும் நான் விசேஷ விஷயங்களைக் கொடுப்பவன் என்றதும் அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பார்த்துக் கேட்கிறான். கர்மபல த்யாக புத்தியை உபதேசிக்கவேணும் என்றதும் க்ருஷ்ணன் சொன்னார். கர்ம யோகிகளது அக்ஷர உபாஸகர் களுக்கு ஈச்வராதீனம் முக்யம் என்பதை நான் கரையேறு தற்குக் காண்பித்தேன். ஆகவே அக்ஷரோபாஸகர்கள் உண்மையாக நன்கு இருந்து அறிந்து விடுபட்ட ஆசையுடன் ஸன்யாஸ தர்மத்தால் மறைந்த ஸாக்ஷாத்கார அம்ருதத்வ காரணமடைகிறார்கள். என பன்னிரண்டாம் அத்தியாயத்தில் பக்தி யோக ஸம்பந்த விஷயங்கள் விஸ்தாரமாக சொல்லப் பட்டது.

பரக்ருதி இரு விதம் என முன்பு சொல்லப்பட்டது. அது மூன்று உருவமாகவும், எட்டு விதம் எனவும் வேறுபாடு அடையும். முக்யமாக ஸம்ஸார ஹேதுவாகவும், இதரமாக வும் ஜீவ பூதமுள்ள க்ஷேத்ரஜ்ஞ லக்ஷண ஈச்வர ரூபம் உள்ளது. எந்த ப்ரக்ருதியினின்று ஜகத் உத்பத்தி, ஸ்திதி, லயம், இவைகள் உண்டாயிற்றோ அது இதுவே என பதின்மூன்றும் அத்தியாயத்தில் ப்ரக்ருதி புருஷனது விவேக யோகம் சொல்லப்பட்டது.

மரணத்வாரமுடையது பலம். ஜீவனுடன் இருக்கையி லேயே குணங்களைத் தாண்டி அம்ருதத்தை ஸாப்பிடுகிறான். குணாதீதனுக்கு ஆசாரம் சொல்லப்பட்டது என பதினான்காம் அத்தியாயத்தில் மூன்று குணங்களது விபாகம் சொல்லப் பட்டது.

காமிகளது கர்ம பலம், ஜ்ஞானிகளது ஜ்ஞான பலம், இவை பக்தி யோகத்தால் என்னை அடைவிக்கிறது. யார் என்னை ஸேவை செய்கிறார்களோ? அவர்கள் என் ப்ரஸாதத்

தால் ஜ்ஞான ப்ராப்தி க்ரமத்துடன் குணநித மோக்ஷமடை கின்றனர். ஸம்ஸார வ்ருக்ஷத்தின் இதர அவயவ கல்பபனேயும் சொல்லப்படுகிறது. எவ்விதம அக்னி, ஜ்வாலேயிடம் திரும்பு கிறதில்லேயோ அவ்விதம் மோக்ஷமடைந்தவன் ஸம்ஸாரத்தி னிடம் திரும்புகிறதில்லே புருஷோத்தமனை என்னே எவர் கள் அடைகிருர்களில்லேயோ? அவர்கள் தனது அபேக்ஷப் பலமுடையவர்கள், அவர்களது விஷயம் மறுபடி மறுபடி ஜனித்துப் பாப ஹேதுவுக்குக் காரணர்களாகும் தன்மை என பதினேந்தாம் அத்தியாயத்தில் புருஷோத்தம யோகம் என்னும் விஷயத்தை விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது.

ஸத்வ சுத்திக்கு அபயம் காரணம் அஸுர ஸம்பத் சொல்லப்படுகிறது. இந்த ஸம்பத்களுக்கு கார்யம் சொல்லப் படுகிறது. ப்ரத்யக்ஷமாக அஸுர ஸம்பத் தள்ளமுடியும் என்பதை உபதேசம் செய்கிருர், இந்த அஸுர ஸம்பத்தை தள்ளுதற்கு ச்ரேயஸ் முக்யம். அதற்கு ப்ரமாணம் சாஸ்த்ரம் காரணம். சாஸ்த்ர ப்ரமாணத்தால் இரு கார்யமும் செய்ய முடியும் எனப் பதினும்அத்தியாயத்தில் தேவ, அஸுர ஸம்பத் பிரிவு என்ற விஷயங்கள் சொல்லப்பட்டது.

இந்தக் கார்யத்தினுலும், லிங்க உருவ தைவாதி பூஜையாலும், ஸத்வாதி நிஷ்டைகள் அநுமானிக்கவேண்டி யது. இவ்விதம் நிர்ணயித்த கார்யங்களில் ஸத்வாதி நிஷ்ட் சாஸ்த்ர விதியின் கார்யத்தில் ஆயிரத்தில் ஒருவன்தான் தேவாதி பூஜைகளில் அதே கார்யமாகச் செய்து ஸத்வ நிஷ்டனுக ஆக முடியும். அநேகமாக ரஜோ குணமுள்ளவர்கள் ப்ராணிகளாகின்றனர். யஜ்ஞம் மூன்று விதம். தபஸ் மூன்று விதம் தான பேதம், யஜ்ஞம், தானம், தபஸ். இவைகளுச்குப் பல ரூபம் சொல்லப்படுகிறது. ஸத் விஷயம் சொல்லப் படுகிறது. எல்லா விடத்திலும் ச்ரத்தை ப்ரதானமாக உடைய தால் எல்லாம் ஸம்பாதிக்கப்படுகிறது என பதினேழாம் அத்தியாயத்தில் ச்ரத்தை, தபஸ், தானம், என்ற இவ் விஷ யங்கள் விரிவாகச் சொல்லப்பட்டது.

ஸர்வ வேதாந்த சுருக்கம் கடைசி அத்தியாயத்தில் ஆரம்பம் செய்யப்படுகிறது. ஜ்ஞானமில்லாதவனுக்கும் மோக்ஷோபாயம் சொல்லப்படுகிறது. எவன் அதிகாரியோ




அவன் ஸங்கங்களை விட்டு ஈச்வரார்ப்பணமாக நித்ய கர்மாக்களைச் .செய்யவேணும். அவனுக்குப் பலம், ஆனால் இவைகளில் பாபமின்றி மனது நித்ய கர்மாவில் சுத்தியாய் அடையப் படுகிறது. சுத்தம் ப்ரஸன்னமாகி ஆலோசனையைப் பொறுமையுடன் அடைகிறான். அவனுக்கே நித்ய கர்மாநுஷ்டானத்தால் சுத்தமனது ஆத்ம ஜ்ஞானம் மூலம் வரிசையாக அது நிலைமைக்கு வரும் சுத்த மனதுடன் பார்க்கிறான். பிறகு கர்மாக்களைச் செய்ய ஆரம்பிக்கிறான். ஸர்வ வேதாந்த ஸங்க்ரஹ விஷயங்களைத் தெரிந்து அறியவேணும். கேட்பவனுக்குப் பலம் சொல்லப்படுகிறது. கடைசியில் இதுவே கடைசியில் இதுவே உயரியதாக அறியவேணும். என பதினெட்டாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள விஷயம்.

கடைசியில் முதல் அத்தியாயத்தில் சொல்லியடி ஸஞ்சயர் திருதராஷ்ட்ரருக்குச் சொல்லுவதாக ஆரம்பித்து அதை முடிப்பதை காண்பிக்கிறது. ஆரம்பித்தது போல் முடிந்தது குறிப்பிடத்தக்கது விஷயம்.

கடைசியாக என்ன தோன்றுகிறதென்றால் பகவத் கீதை எம்மதத்தினர்க்கும் துவேஷமின்றி உபயோகிக்கவும், உபயோகப்படுத்தவும் விஷயங்கள் அதிகமாகக் காணப்படுகின்ற காரணம் யாதெனில், ஒருமதத்தினரையாவது ஈச்வரனையாவது தூஷித்ததாக இல்லை. எல்லா உலகமும், நானே உள்ளேன் என விவரிக்கப்பட்டிருக்கிறது என்ற விஷயம் மிக்க கௌரவத்துடன் ப்ரகாசிக்கிறது,

ஆகவே கீதா சாஸ்த்ரத்தில் யோகிக்கும், ஸந்யாஸிக்கும், க்ருஹஸ்தனுக்கும் சொல்லவேண்டிய விஷயங்கள் பூராவும் சொல்லி உள்ளது. அதன்படி ஜனங்கள் எல்லோரும் த்வேஷமின்றி ஸரிவர நடந்து மிக்க கௌரவமான ச்ரேயஸ்ஸை உடைய மோக்ஷத்தை அடைய எல்லாம் வல்ல விச்வ ரூபியான க்ருஷ்ணன் அருள் புரிவாராக.

பகவத்கீதையில் யுத்த மத்தியில் 700 சுலோகங்களில் உபதேசம் எப்படிச் செய்யப்பட்டது என யாருக்கும் ஸந்தேஹம் உண்டாகலாம். ஆனால் ஈசனது யோக மாயையை க்ஷணிக நேரத்தில் உபதேசிக்கப்பட்டதே தவிர வேறில்லை.

உபதேசித்ததை அப்படியே வ்யாஸர் எப்படி எழுதினர் எனக் கேட்கலாம். அதற்குப் பதில் ஸாக்ஷாத் நாராயணர் அவதாரம் வ்யாஸர் ஞானப்படியால் அப்படியே எழுதினர் என்பதே. இதில் யாதொரு ஸந்தேஹமும் ஏற்படவேண்டாம் என எண்ணுதல் வேண்டும்.

சுபம்!

புராண ரத்னம், உபந்யாஸசரபம்,
C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்,
சிதம்பரம்.

——

